# ஸ்ரீ நடராஜா
# தரிசனமுறைப்பதிகம்.



ஆக்கியோன்
"கவிச்சக்ரவர்த்தி"
இராம. வயித்தியநாத சர்மா,
சிதம்பரம்.

சிவமயம்

தேவிதுணை

---

# சிதம்பரம்

# ஸ்ரீ நடராஜா தரிசன முறைப்பதிகம்.

---

(காப்பு)

வெண்பா

தில்லைநட ராஜனருட் சேர்தரிச னஞ்செயுமோர்
வல்லமுறை யைப்பா வழிதுதித்துச்—சொல்லமுனங்
கற்பகவி நாயகனின் காலிணைபோற் றக்கலைதேர்
விற்பனர்க ளேத்தவரு மேல்.

79/1

# ஸ்ரீ நடராஜா தரிசனமுறைப்பதிகம்.

(நூல்)

சத்திசிவ காமசுந் தரிமகிழ நந்திமத்
　　தளமிருகை தாந்திமி கிடத்
தகிடதக தாந்த்ரிகிட தத்தோங் தளாங்கெனச்
　　சதிமுழவ் கிடமா யவன்
றத்திமிகு தாளமுந் தகஜணுத தகஜணுத
　　தாந்தாமெ னக்கை போடத்
தனியயன் சுருதிகை தான்கூட்டி முன்னுறச்
　　சரிகமப தநிஸ சுரமு
நத்தியிசை தும்புருவர் நாரதர்கள் பாடவிண்
　　ணுடர்துதி செய்தி லகிட
நண்ணுறுப தஞ்சலிவி யாக்ரபா தர்க்காக
　　நர்த்தனஞ் சிற்சபை பெற
வெத்தினமு நின்றுலக ரேத்தச் சிதம்பரத்
　　தெங்கள்கலி தீர வாடு
மீசகயி லாசபர மேசவுமை நேசஜக
　　தீசநட ராச வருளே. (க)

மூவாயி ரவர்வேத முறையோது மறையோர்கண்
முதலோர்கள் வரச மருவு
முன்வீதி நடராஜ மூர்த்திரத மேறிவரு
முதல்வீதி வலமாக முன்
னுவார நடராஜ நடராஜ வென்றுசொலி
நால்வீதி நாற்கோ புர
நற்றரிச னங்கண்டு நடராஜன் வெளியேறு
நலவாயில் வழியு ளேபோய்
மாவாழ்வ தேறுமுன் வாயிற்க ணேசனுயர்
மாமுருக னைத்து தித்து
வந்துள் வலங்கெதற்கு வாயினேர் கண்டவண்
வடக்குமுக மாயு னருளே
யீவாயெ னத்துதித் தேத்தச் சிதம்பரத்
தெங்கள்கலி தீர வாடு
மீசகயி லாசபர மேசவுமை நேசஜக
தீசநட ராச வருளே. (௬)

முக்குறுணி யரிசிபெறு மோதகப் பிள்ளையார்
முன்கோபு ரக்கற் பக
முருகன்மீ னாக்ஷியுமை மூர்த்திமொரு கான்மாட
முதல்வனெஞ் சிவகாமி சீர்
மிக்குறுந் துர்க்கைபாண் டிபநாய கக்குகன்
விந்தைநவ லிங்க மூர்த்தி
விரிபுகழ்கொள் சிவகங்கை மேலாயி ரங்கால்
விளங்குமண் டபதரி சனம்
பக்குவம தாகமுன் பண்ணியிரு பதுடனொரு
படிவந்து புருடா ம்ருகப்
பரமரைப் போற்றிநற் படிமேவேற்று வலமதாய்ப்
பார்ககத்வ ஜஸ்தம்ப னே
ரிக்குவல யத்தோர்க ளேத்தச் சிதம்பரத்
தெங்கள்கலி தீர வாடு
மீசகயி லாசபர மேசவுமை நேசஜக
தீசநட ராச வருளே. (௫)

நீண்டுறு கொடித்தப்ப நின்றார்த்வ சபைசரப
நிகழ்நந்த விடம திந்து
நேரிலக் குமிதம்ப நிலைமுருகன் விண்கொள்விச்
நேசனுல் வர்கடிரு முறை
யாண்டுறு மிடம்பிள்ளை யார்கள்குரு மூர்த்திமா
வறுபத்து மூவருடனே
யருணச லேசனெம் மாகிதிரு மூலருமை
யாள்பார்வ தியைவ ணங்கிக்
காண்டுறந் தேவசபை கண்டுமூ வாயிரவர்
காணநட ராச னுடனெக்
காரியமு முடியக் கலந்துறும் பொதுவார்
கணக்கண்டு ளேவந் தது
மீண்டுறுஞ் சந்நிதியி லேத்தச் சிதம்பரத்
தெங்கள்கலி தீர வாடு
மீசகயி லாசபர மேசவுமை நேசஜக
தீசநட ராச வருளே. (௪)

நிதியேற வருளீயு நினதுசந் நிதிநின்று
நிகழ் த்வஜஸ் தம்ப வலமாய்
நெடுமாலி னோர்சைன நிலைகண்டு வந்துவல
நேர்விக்கி நேசன் வேலன்
மதிகோடா காயத்து மன்னுலிங் கந்தங்க
மருவோடு காண்சிற் சபை
மாணறிந் தெதிர்சூர்யன் வைரவன் றரிசன
மகத்துவம் ப்ர்ம்ம சண்டி
வதிதருமி டந்தேர்ந்து மாசந்நி தானமுயர்
மன்னுறத் தங்கத்தி லுன்
வடிவுறச் சிவகாமி மற்றுமுள மூர்த்திகள்
வளர்ப்பமது கண்டு நின்று
லெதிரா யிருக்குமுனை யேத்தச் சிதம்பரத்
தெங்கள்கலி தீர வாடு
மீசகயி லாசபர மேசவுமை நேசஜக
தீசநட ராச வருளே. (ரு)

பேர்மிகு சதாசிவப் பீடத்தி னுன்மறைகள்
பேசுருத் திரனின் றிருப்
பீடத்தி னால்களரி பீடத்தி லேந்தாய்ப்
பிறங்குபூ தங்க ளயனின்
சீர்கொள்பீ டத்தினிற் றிகழுக மங்களே
செறிதூண்க டொண்ணூ றுடன்
சேராறு தத்வங்க டேர்சாள ரங்கள்கலை
செப்புமறு பத்து நான்கு
மார்கைமர மிருபத்தொ ராயிரத் தறுநூற
தாமுயிர்ப் புகளோ டுக
ளதற்கேழு பத்திரண் டாயிரந் தருநாடி
யாணிநவ சத்திகள் குட
மேர்கொள்சிற் சபையேறி யேத்தச் சிதம்பரத்
தெங்கள்கலி தீர வாடு
மீசகயி லாசபர மேசவுமை நேசஜக
தீசநட ராச வருளே. (௬)

உதயகா லம்பாலி னுணவுநை வேதன
முடன்கால சந்தி பின்ன
ரோரிரத் தினசபா பதிதரிச னங்காண
வுறுமிரண் டாங்கால மா
விதமுளுச் சிக்கால மேற்சாய ரக்ஷா
மேவிரண் டாங்கால முன்
மிகுமர்த்த சாமத்து மின்னுமபி டேகாதி
வேதியர்கண் மூவா யிரர்
நிதமியற் றிடமாயு நியதிபெறு பாவாடை
நேருமிட மாயு நந்தி
நிகழுமிட மாயுமெந் நேரமதி னுந்திகழ
நிற்குமிட மாயு மிலகி
யிதமிகும் பொற்சபைமு னேத்தச் சிதம்பரத்
தெங்கள்கவி தீர வாடு
மீசகயி லாசபர மேசவுமை நேசஜக
தீசநட ராச வருளே. (எ)

ஆறுகா லத்துமுன் னதுபுகழ்கொள் பிரதிநிதி
யாஞ்சந்த்ர மௌலீச னுக்
கனுதினமு மபிடேக மாடகச் சபையிலக
வாகுமோர் வருடத் திலே
கூறுமுன் றனதுடற் குளிரவபி டேகநீ
கொண்டிடுவ தாறவை யுளே
குலவிரத மேறிக் குதூகலத் துடன்விழாக்
கொண்டுமோர் கழியா னியில்
விராடனி ராஜசபை மேவியங் குங்கும்ப
மேடசிம் மங்கன் னியில்
விளங்குபொற் சபையிலு மிகப்புகழ் தாக்கொளு
விண்ணவர் துதிக்க நாளு [வை
மேறுகவி வாணர்மிக வேத்தச் சிதம்பரத்
தெங்கள்கலி தீர வாடு
மீசகயி லாசபர மேசவுமை நேசஜக
தீசநட ராச வருளே. (அ)

உலகமூர்த் திகளெலா முற்றொடுங் குமிடமற்
 றுன்சோதி வெளியுட் கலந்
துயர்நந்த னொடுவாத வூரனுற் றிடுமிட
 முமாபதி சிவாசாரியா
ரலகிலிசை பெற்றவிட மதிரகசியப்பொரு
 ளடங்கிடங் காளி முன்கூத்
தாடியவி டந்தில்லை யம்பலவி டங்கோயி
 லாகுமிட மிதய தானத்
தலவிடம் வியாக்ரபா தன்பதஞ் சலியிடஞ்
 சத்திமிக வேகொளு மிடந்
தாணிமூ வாயிரவர் தங்கியுன தொருபூசை
 தானென்று நன்று றச்செய்
திலகுமிட மாயெவரு மேத்தச் சிதம்பரத்
 தெங்கள்கலி தீர வாடு
மீசகயி லாசபவ மேசவுமை நேசஜக
 தீசநட ராச வருளே. (கூ)

நன்றானருள் வாழிநீ டடனமிடு சபைவாழி
நன்றாமுன் கோயில் வாழி
நாளுமுன் றிருப்பூசை நைவேதனங்கண்மிக
நயமேற வாழி யுலகி
லொன்றானை யருச்சிக்க வுற்றவந் தண்ர்வாழி
யுன்னடி வணங்கி யேத்து
மோரடியர் வாழியுன் றிருவிழா முதலெலா
முயர்வுபெற வாழி யுன்சீர்
துன்றுதரி சனமுறை சொலுங்கவியி தாருநற்
றதிசெய்து வாழி யுன்பேர்
சொல்லியனு தினமுநற் றோத்திரஞ் செய்துவரு
தொண்டர்மிக வாழி வாழி
யென்றமிசை காணுமுனை யேத்தச் சிதம்பரத்
தெங்கள்கலி தீர வாடு
மீசகயி லாசபர மேசவுமை நேசஜக
தீசநட ராச வருளே. (௧0)

முற்றுப்பெற்றது.

சுபம்!

(மாயாப்ர பஞ்சத்திலென்ற மெட்டு)

(பல்லவி)

அம்பலத் தாண்டவ னானந்தத் தாண்டவம்
அம்புவி மீதிற்கண்டார்கள் விண்டார்பவம் (அம்)

(அநுபல்லவி)

அம்பிகை பார்த்திட அயன்ச்ருதி சேர்த்திட
அரிநந்தி தாளமத் தளமங்கை யார்த்திட
தும்புரு நாரதர் சுயஞ்சொலியேத்திட
தூய்பதஞ் சலிபுலிப் பாதர்நின் றேத்திட
தோந்தீந்தத் தோந்தீமென் றாடுவதை
அம்புவி மீதிற்கண் டார்கள்விண் டார்பவம் (அம்ப)

(சரணம்)

குஞ்சித பாதமேற் கொண்டுறத் தூக்கி
குவலயத் தோர்கண்டு குளிரக்கணோக்கி
சஞ்சித ப்ராரப்தந் தருவினை போக்கி
சருமனின் பாப்புவி தழைத்திட வாக்கி
தாந்தீந்தத் தாந்தீமென் றாடுவதை
அம்புவி மீதிற்கண் டார்கள்விண் டார்பவம் (அம்ப)

(வேறு)

(கிருஷ்ணாக் கிருஷ்ணா என்ற மெட்டு)

(பல்லவி)

பரா பரா பரையோர் பாகா
பணிவேன் நானுனைப் பதி நீ வாகா (பரா)

(அநுபல்லவி)

ஹரா ஹரா அருள் ஆரணனே
அம்பலத் தாடிடுங் காரணனே
அடிமை யுனதோர் அடியே பணிவேன் (பரா)

(சரணம்)

கதிர் சருமா கவியிதனால்
துதியே செய்துனைத் தோத்தரித்தேன்
பதிநீ அருள்வாய் பணிவே னுனை. (பரா)

(வேறு)

(பஜனை செய்வோம் கண்ணன் நாமம் என்றமெட்டு)

(பல்லவி)

கனகச பேசனைக் கண்டார்
கவலையெலாமறக் கண்டார் (கன)

(அநுபல்லவி)

பனகசயனனயன் பார்த்தனுபவித்திட
தினநட னம்புரியு மீசன்-தில்லை (கன)

(சரணம்)

பதஞ்சலி யுடன்புலிப் பாதரு மேத்திட
பக்தர்கள் பணியவம் பலத்தே
நிதஞ்சலி யாதுயர் நின்றிடவொருகால்
நிலத்தொரு காலுற வாடும்-தில்லை (கன)

தில்லைமூ வாயிரர் செய்திடும் பூசையில்
சிந்தைக ளிக்குஞ்சிற்ச பேசன்
எல்லையி லானந்த மிசைக்கவிச் சருமன்பாக்
கென்றுமகி ழும்பல வாசன்-தில்லை (கன)

(வேறு)

திவ்ய தரிசனமென்ற மெட்டு)

(பல்லவி)

சிவ-
சிதம்பர தெரிசனஞ் செய்வோம்
சிந்தை மகிழ்ந்துற-சிவ (சிதம்)

(அநுபல்லவி)

நிதம்பர னருள்பொழி நிருத்தனங் கண்டு
நேருநம் பவவினை நீங்க-சிவ (சிதம்)

(சரணம்)

மூவா யிரர்பணி மூர்த்திசந் நிதிநேர்
முகமனு தினந்துதி மொழிந்தே
காவா யெனநம் கரங்குவித் தெமதோர்
கரும வினையகலக் காண்போம்-சிவ (சிதம்)

தருமந் தழைய வின்பந் தருந்தமிழ்ச் சுவைமிகச்
சந்தம் பொழியவளந் தரவே
சருமன் கவிபுகழச் சாற்றித்து தித்துப்புவி
சன்மங் கழியப்பாடி நாமே-சிவ (சிதம்)

முற்றிற்று.

சுபம்! சுபம்!! சுபம்!!!

இப் புத்தகம்

புதுவை,

ஸ்ரீமாந்! சாமு சதாநந்தம்

அவர்களால் வெளிவரப்பெற்றது.

1938

புதுவை, கமர்ஷியல் பிரஸில், பதிப்பிக்கப்பெற்றது.